சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு-௫௫

உ

திருச்சிற்றம்பலம்

---

# திருஞானசம்பந்தர் தேவாரம் இயற்கைப்பொருளழகு



இது

சென்னை நியாய கலாசாலைப் பேராசிரியர்

கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள்

எம். ஏ,. எம். எல்,. அட்வகேட்

இயற்றியது



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி :: & சென்னை

இரக்தாட்சி ௵ சித்திரை ௴

உ

திருச்சிற்றம்பலம்

# திருஞான சம்பந்தர் தேவாரம்
# இயற்கைப்பொருளழகு

இந்த ஞாலமானது முதல்வனது திருவுள்ளக் குறிப்பு வரைந்துள்ள ஒரு பேரேடு போன்றது. அது "செயல் மிகு மாந்தரும் இயல் மிகுமுலக மும்" என இருபெரும் பகுதிகளையுடைய பொன் னேடு போல்வது எனவுங் கூறுவர். இவ் விருபகுதி களும் பலவகைகளில் ஒன்றோடொன்று தொடர் புடையனவாகத் திகழ்கின்றன. மக்களது உடம்பே இயற்கை உலகத்தின் பகுதியாக அமைதலின் உடம்பு நிலைபெறுதற்கும் வளருதற்கும் இயற்கைப் பொருள்களின் றுணை யின்றியமையாததா யிருக்கின் றது. பசி, குளிர், நோய் முதலியவற்றைத் தோற்று விப்பதும் நீக்குவதும் இயற்பொருட் டொடர்பே யாகும். உண்டி, ஆடை, உறையுள், மருந்து என் னும் இவற்றைச் செம்மையாகத் திறம்பட வகுத்து அமைத்துக் கொள்ளும் பொருட்டு, மக்கள் செய்யு முயற்சி எல்லையற்றதாக விருக்கிறது. இனி, இஞ் ஞாலத்தின் அளப்பருந் தன்மையையும் வளப்பெருங்

காட்சியையும், கண்டுகண்டு பன்முறையாய்ந்து, அவற்றின் அமைப்பினையும் தெரிந்து கொள்வதற்கு எத்தனையோ காலம் முயன்று, எண்ணிறந்த அரிய நூல்களைச் செய்து வைத்தும் இன்னும் தமது அறிவினாலே மக்கள் அவற்றின் முடிவு கண்டிலர்.

இனி, மக்களது உள்ளத்திற்கு இன்பம் விளைக்கவல்ல இயற்பொருள் அழகினையும் இத்துணைத்தென அறுதியிட்டுரைத்தல் அரிதென்பதில் ஐயம் யாதுளது ?

பன்னாட்டிலும், உள்ள நன்மாந்தரது உலக வாழ்க்கைத்திறம் பெற்ற நாட் டொடங்கி, பாவலரும், இசைவலரும், ஓவியரும் மக்களது உள்ள உணர்வின் கண் உவகை, அவலம், வியப்பு, மயல், நகை, பெருமிதம் முதலிய எண் சுவையையும் எண்ணிறந்த வகைச் சுவைகளையும் இனிதாக விளைவித்து இன்பந் தரும் இயற்கைப் பொருள்களின் வனப்பையும் வளத்தையும் ஆய்ந்தாய்ந்து எழுதியும் பாடியும் இன்னும் அவற்றின் எழிலை இவ்வளவு என்று முடிவு காணாது இளைத்து நிற்கின்றனர். மனிதனது உடம்பிற்கும் அறிவிற்கும் எட்டாததாய் அவனது உயிர் விலாசமாகிற உணர்ச்சியொடு கலந்து இன்பம் பயப்பதாய், எழுத்திலும் பாட்டிலும் அமையாது எங்கும் பொங்கி யெழுகின்ற இயற்கை மாதின் பேரழகை என்னென் றுரைப்பது !

இயற்கைப்பொருளழகினைச் செயற்கையிற் காட்டும் கலைகள் பலவினும் பாட்டென்பதே இணையற்ற

இன்பம் ஈவது; இசைக்கும் அஃது இடமாயிருப்பது; உள்ளச் சுவரில் ஓவியம் அமைப்பது; எவ்விதப்பொருள் நலத்தையும் எண்ண மென்னுங் கண்ணுடியிற் காட்டுவது. இத்தகைய பாட்டானது உயிரும் உடம்பும்போல சொல்லும் பொருளும் இயைந்திலங்கப் பெறவேண்டும். பாவலனது உள்ளத்தின் வெளிவடிவமே பாட்டாமாதலின் அவனது உள்ளம் போற் றெளிவும் ஆழமுஞ் சுவையும் உள்ளதோர் இன்பச் சுனையாகவே அஃதிருக்கும் ஆதலின் கம்பநாட்டடிகள் பம்பைப் பொய்கையை அணிந்துரைக்குமிடத்து அதனைக் கற்பகம்போன்ற பாவலர் உள்ளத்திற்கு உவமித்தார். வண்பாவலர் உள்ளம் பாதாளத்தினும் ஆழம் மிக்கது என்றது பின் வரும் செய்யுளால் நன்கு விளங்கும்.

"எற்பொரு நாகர்தம் மிருக்கை யீதெனக்
கிற்பதோர் காட்சிய தெனினுங் கீழுறக்
கற்பக மனைய வக்கவிஞர் நாட்டிய
சொற்பொருளாமெனத் தோன்றல் சான்றது."

பாவலரது உணர்வின் மாட்சிக்குத் தக்கவாறே பாட்டினது நயமும் ஆம். ஆதலின் இயற்கை நலனை ஆராயப் புகுங்கால் இயற்கை மாதின் தலைவனை ஞானக் கண்ணுற் கண்டாரது அருட்பனுவல்களே தக்க கருவியாகும். ஆதலின் அவ்வாறு அருள் பெற்ற பெரியாருட் சிறந்த திருஞான சம்பந்தப் பெருமான் பச்சிளங் குழந்தைப் பருவத்தினராய்த் திருவாய் மலர்ந்தருளிய

தேவாரத் திருப்பதிகங்களில் இயற்கைப்பொருள் அழகுணர்த்தும் செய்யுட் பகுதியே, இவண் ஆராய எடுத்துக் கொள்ளப்பட்டது.

திருஞான சம்பந்தப் பெருமானது திருப் பாசுரங்களில் இயற்கைப் பொருள் வனப்பு எவ்வாறு ஒளிர்கின்றதென்பதை ஆராய்வாம். நூல், உரை முதலிய பலவகை இலக்கியங்களுள்ளும் பாட்டேன்பது கற்றவளவிலே மிகுந்த இன்பந் தருவது. அஃது ஐம்பொறி யுணர்விற்கும், ஆயு மறிவிற்கும் இனிமை தருவதோடு எல்லையில்லா தெழுகின்ற மக்கள் எண்ணத்தினையே மிக மகிழ்விக்குந் தன்மையுடையது. புனைந்து கூறுதலானும் பொருள் நயம் விளக்குதலானும் நல்லிசைப்பாவின் செவ்வி இனிது விளங்கும். இருவகையானும் நமது அருட்பாவலரது குமுதவாயெழுந்த அமுதச் சீரானது எவ்வாறு நமது எண்ணத்தை மகிழ்விப்பது என்று பார்ப்பாம்.

கற்றோரன்றி மற்றோரும் படித்த வளவில் மிக்க மகிழ்ச்சி யடைதற்கு ஏதுவாயது யாதெனில் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் ஐம்புலக்காட்சியினது பொருள்நயம் விளக்குஞ் செய்யுட்களேயாம். ஐம்பொறிகளினுங் கண்ணே சிறந்தது. கண்ணைக் கவர்வன பலவற்றுள்ளும் சிறந்தது நிறம். நிறங்களை நயம்பெறக் காட்டுவன ஒளிமிக்க மணிகளாம். ஒரு பொருளின் நயத்தைப் புனைந்து கூறுபவர் அதனை உருவக வாயிலாகக் கூறுமிடத்து, சொற் சுருக்கமும் பொருட்

பெருக்கமும் அமைப்பர். அத்தகைய பொருள்கள் பலவற்றைத் தொகுத்துக் கூறுபவர் அவற்றின் உருவங்களையும் தொகுத்துக் கூறுவது வழக்கம். அம்முறை சிறந்து தோன்றுவது எவ்விடத்தே யெனின், ஒரு பொருளின் பல்வகை உறுப்புக்களுக்கும் பலநிற மணிகளையுந் தொகுத்து உருவகப் படுத்துமிடத்தே யென்ப. அங்ஙனங் கூறுவதோ டமையாது ஒரு பொருளின் ஒரு பகுதிக்கு ஓர் மணியை உருவகமாகவும், அது வெவ்வேறு பகுதிகளாகுமிடத்து அவ்வப் பகுதிகளுக்கு வெவ்வேறு மணிகளை யுருவகமாகவுங் கூறி அப்பொருளின் பல பகுதிகளும் ஒன்றில் நின்று ஒன்று எழுவது போலவே ஒவ்வொரு மணியினின்று அவ்வவற்றிற்கு அடுத்துள்ள மணி தோன்றுவது போலவும் அமைத்துச் செய்யுள் செய்தலைப் பாநயம் உணர்வோர் பெரிதும் பாராட்டா நிற்பர்: எடுத்துக் காட்டாக இவ்வகை உருவக வமைப்பு,

"எண்ணார் முத்தமீன்று மரகதம்போற் காய்த்துக்
கண்ணார்கமுகு பவளம் பழுக்குங் கலிக்காழி"

என்ற சீகாழிப் பதிகத்தின்கண் காணப்படும். இவ்வடிகளின் பொருள் : தொகைமிக்க முத்துப்போன்ற பூக்களைப் பூத்து, மரகதம் போன்ற பசுங்காய்களைக் காய்த்து, பவளம்போற் செவ்விய பழக்குலைகளைக் கொண்டுள்ள கண்கவர் வனப்பு மிக்க கமுக மரங்கள் சிறந்திலங்கும் முழக்கம் பொருந்திய சீகாழி மா நகர் என்பது.

பூக்கள் என்று விரித்துக் கூறாது முத்தம் என்ற வளவிலே அவற்றைப் பெறவைத்தனர். அவ்வாறே பவளம் என்ற விடத்துங் காண்க. பூக்கள் சிறிய வாகத் தோன்றுவ வாகலின் அவற்றின் எண் மிகுதி சிறந்து விளங்கும். அதனால் 'எண்ணார் (எண்+ஆர்) முத்த' மென்றார். பூவிலிருந்து காய் தோன்றக் காயிலிருந்து பழம் வருவதுபோல முத்திலிருந்து மரகதம் தோன்ற அது பின் பவளமாவதுபோலக் குறித்தமை காண்க. நெடிது வளர்ந்து கதிரவனது ஒளிபெற்று மிளிரும் கமுகின் பகுதிகளுக்கு ஒளி யுடைய மணிகளே சிறந்த உவமையாதல் காண்க. கமுக மரப்பொழில்கள் பச்சைப் பசேலென வான ளாவி வளர்ந்தோங்கிக் காட்சிக்கு இன்பம் ஈவதில் இணையற்ற பெருமை வாய்ந்ததாகலின் 'கண்ணார் கமுகு' என்றார். பிறமரங்களினும் கமுகினையே விதந் தோதினமை அது பற்றியேயா மென்க. மேலும் கமுகின் பழங்கள் மங்கல மிக்க மண முதலிய சிறப்புக்களிற் பலர்க்கும் வழங்கப் பெரிதும் பயன் படுவன வாதலால் அவை பயன்படற்குரிய முழக்கமா கிய நற்செய்கைகள் மிக்க மாநகர மென்பார் 'கலிக் காழி' என்றனர். இப் பாநயங்களை விளையாட்டுப் போக்கிலே கூறிய தமது அமுத மொழியாற் பெற வைத்த ஆசிரியரின் பாவன்மையை நாமோ அளக்க வல்லேம்!

மங்கல மிக்க மணச்சீர் முதலியவற்றை நினை வூட்டும் இயற்கை யமைப்பினை அணிபெறக் கூறுங்

திறன் நமது பேராசிரியர் பாட்டுக்களில் மிகுந்து தோன்றும். தெளிபளிங்கன்ன தீம்புனல் நிறைந்துள்ள பொய்கையைச் சூழ்ந்து புன்க மரங்கள் பூத்துத் திகழ்வன. அப் பொய்கையிடத்தே பொதிந்து விளங்கும் செந்தாமரைகள் அம்மர நிழலின் பாங்கர் மிளிர்வன. அப்பொய்கைக்கண் ணுள்ள சங்கங்களாகிய வளைகள் மிகுந்து ஒலிப்பன. அனைய பொய்கைகள் மிகுந்துள்ள திருவீழிமிழலைக் குரிய திருப்பதிகத்தே அவற்றின் அழகை ஆசிரியர் பின்வருமாறு புனைந்துரைத்தமை காண்க.

அஃதெவ்வா றெனில், பொய்கை யிடத்தே மணிகள் மிகுந்து இலங்குவதால் அங்குள்ள உயிர்வகைகள் மணியிருக்கையில் இருப்பவாயின. இருப்பவைகள், செழிப்பி லிருப்பதால் வாழ்க்கைத் துணை தேடி மணம்புரியக் கருதுபவாயின. அம்மண முழக்கத்தைச் சங்கொலிகள் உணர்த்துவ போன்றன. செந்தாமரைகள் ஞாயிற்றின் ஒளிகொண்டு திகழ்வதால் செந்தீக்குண்டம் போன்றன. அருகிலுள்ள புன்க மரத்தின் மலர்கள், அச் செந்தீயகத்தே மணவினை நிகழ்கின்ற காலத்துத் தூவுகின்ற பொரிபோல் சொரிந்தன. இவ்வாறு சங்க முழங்க தீ வலனெழுந்தோங்க புன்கம் மலர்ப் பொரிதூவ தண் பொய்கை யகத்தே மணியிருக்கை மேல் வீற்றிருந்து வளம்பெற நீர்வாழுயிர்கள் தமது பெண்டிரை மணப்பது போன்ற காட்சிநயமுடைய திருவீழிமிழலை என்னும் பொருளில்,

" தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க்கந்
திகழச் சலசத்தீயுள்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட
மணஞ்செய்யு மிழலையாமே "

என்றருளிச் செய்தனர்.

ஈண்டும் நிறம் பற்றிய உருவகங்கள் சிறந்து விளங்குவது காண்க. இனைய நயங்கள் நமது ஆசிரியர் தேவாரத்தே பற்பல வுள்ளன. பொன்னுவமம் யாண்டும் பொலிந்திலங்கும். பொற்றாமரை, பொலந்தாது, பொற்குருகு, பொற்கொடி, கதிரவன் பொன்னொளி என்புழி அது காண்க.

எதிர் நிறங்களை அணிபெற அமைத்துக் காட்டுந் திறம் நமது ஆசிரியர் திருப்பாடல்களிற் பொலிந்து விளங்கும். கருமுகிலின் வெண்டுளியும், வெண்டாமரையில் கருவண்டும், கருங்குருந்தினருகே செவ்வாழையும், பசுங்கமுகின் செங்கனியும், புன்னையினது வயிரக்கிளியின் பொற்பூவும், இரவிருள் நீக்கும் வெண்முத்தமும், கருங்குன்றேறும் செம்முகக் குரங்கும், வெண்முகில் அளாவும் கரும்பனைமேல் பசுங்கிளியும், தேன் தோய்ந்த செங்கழுநீர்த்தாதிற் புரண்டு கருநிறமாறிச் செந்நிறமாய வண்டும் திருப்பாடல்களுட் பலவிடத்தும் பயில்கின்றன.

காட்சிப்பொருளினுடைய நிறங்களின் ஒற்றுமை வேற்றுமைகளேயன்றி அவற்றின் வடி வமைப்பும்

உள்ளத்திற்கு இன்பந் தருகின்றது. ஆதலால் அதனையும் பல இடங்களில் ஆசிரியர் நலமுறப் புனைந்துள்ளார். யானைக்கொம்பனைய தாழம்பூவும், பாம்பின் முள்ளெயிறுபோன்ற முல்லையரும்பும், யானைத்துதிக்கைபோன்ற வாழைக்குலையும், அனைய பிறவும் ஆசிரியர் தேவாரத்தில் மலிந்துள்ளன. உயிரில் பொருள்களிடத்தே மக்கள் உறுப்புக்கள் பலவற்றின் நயம் ஒருங்கே யமைந்த பான்மை ஆசிரியரது பொய்கை வருணனையில் இனிது விளங்கும்.

"வாவிதொறும் வண்கமல முகங்காட்டச்
செங்குமுதம் வாய்கள்காட்டக்
காவியிருங் கருங்குவளை கருநெய்தல்
கண்காட்டுங் கழுமலமே"

என்ற அடிகளில், தடாகங்களிலே தாமரைகள் முகங்கள் போலவும், செவ்வாம்பல் வாயிதழ்கள்போலவும், குவளையும் நெய்தலும் இரு கண்கள்போலவும் விளங்குதலாலே வாவியானது மகளிர் திருமுகத்தை நினைவூட்டுந் திறத்ததென்பது குறிக்கப்பட்டது. இயற்கைப் பொருள்களுள் நலமுடைய பலவும், செறிவானும், இடவமைதியானும் காட்சி நயஞ் சிறந்து உள்ளங் கவருந் திறத்தனவாகும். மரங்கள் பலவற்றுள்ளும் அழகுடைய சிலவே பாட்டுக்களிற் பயிலுதற் குரியன. அவற்றுள், தெங்கு, கமுகு, வாழை, மா, பலா, கோங்கு, வேங்கை, கரும்பு முதலியன தோற்றத்தாலும், பயனாலும் உள்ளத்திற்கு இன்பம்

பயப்பன. சண்பக மரம், மகிழ மரம் முதலியன நறுமணத்தால் அக மகிழ்விப்பன. இத்தகைய மரங்கள் பெயர் கூறிய அளவிலேயே உள்ளத்திற் பொலிந்து தோன்றி எண்ணத்தை மகிழ்விக்குந் தன்மையவாதலால் அவற்றைத் தொகுத்துக் கூறுதல் நல்லிசைப் பாட்டுக்குச் சிறந்த ஓர் உறுப்பாகும்.

**உதாரணம்:—**

"தேங்கொள் பூங்கமுகு தெங்கிளங் கொடிமாச்
செண்பகம் வண்பலா விலுப்பை
வேங்கை பூமகிழால் வெயிற்புகா வீழி
மிழலையா னென வினைகெடுமே"

"பொழிலார்தரு குலைவாழைக ளெழிலார்
திகழ் போதின்"

"வாழையம் பொழின் மந்திகள் களிப்புற மாவும்
பூகமுங் கதலியும் நெருங்கிய மாதோட்டம்"

"கந்தமார் கேதகைச் சந்தனக் காடுசூழ் கதலிமாடே
வந்துமா வள்ளையின் பவரளிக் குவளையைச் சாடி
யோட"

"மழையார் சாரல் செம்புனல் வந்தங் கடிவருடக்
கழையார் கரும்பு கண்வளர் சோலை"

"மானேறு கொல்லை மயிலேறிவந்து குயிலேறு
சோலை மருவித் தேனேறு மாவின் வளமேறி யாடு
திருமுல்லைவாயி லிதுவே."

இனி, வயல்களும், தோப்புக்களும், குளங்களும், மாளிகைகளும் ஒரு நிரலாக அமைந்து நகரங்களுக்கு அழகு செய்யும் பான்மையை ஆசிரியர் மிகச் செம்மையாகப் பல இடங்களில் விளக்கியுள்ளார்.

உதாரணம்:—

" நீருளார் கயல் வாவிசூழ் பொழினீண்ட மாவயலீண்டு மாமதிற்
றேரினூர்மறு கில்விழா மல்கு திருக்களர் "

இத் தேவாரவடிகளிலே, தண்பொய்கைகளைச் சூழ்ந்து பொழில்கள் மிகுந்திருப்பதினாலே மரங்கள் நீருள் தோன்றுங் காட்சி நயம் குறிப்பிக்கப்பட்டது. பொழில்கள் மதிலுக் கருகில் இருப்பின் மதிலின் எடுப்பு செம்மையாக விளங்காதாகலின் பொழிலுக்கும் மதிலுக்குமிடையே அழகிய வயல்கள் அமையப்பெற்றன. பொழில் மரங்கள் நகரத்திற்கு இயற்கை யெல்லை போலவும், மதிற்சுவர்கள் செயற்கை யெல்லைபோலவும் விளங்குவன சுட்டப்பட்டது.

பொய்கைகளில் பொழில்கள் தோன்றும் காட்சி போலவே அவைகளில் மாளிகைகளின் சாயல் தோன்றுங் காட்சியும் இன்பந் தருவதாதலால் அதனையும் ஆசிரியர் சில இடங்களில் கூறியுள்ளார்.

" வாய்த்த மாளிகை சூழ்தரு வண்புகார் மாடே
பூத்த வாவிகள் சூழ்ந்து பொலிந்தசாய்க் காடே "

இனி, குளங்களுக்கு அழகு பல்வகை நறுமலர்களும் அவற்றின் தேனைக் கவரவரும் வண்டினதும்

மீனைக் கவரவரும் பல்வகைப் பறவைகளினதும் தோற்றமு மாதலால் அவற்றையும் பலவிடங்களில் தொகுத்துக் கூறியுள்ளார்.

உதாரணம்:—

"கள்ளார் நெய்தல் கழுநீராம்பல் கமலங்கள்
புள்ளார் பொய்கைப் பூப்பல தோன்றும்"

நகைச்சுவையை விளைக்கும் இயற்கைப் பொருளின் செய்திறங்களைக் கூறும் செய்யுட்கள் அளவிலா நயமுடையன. பொழிலகத்தேயுள்ள நெடிய தெங்குகளினின்று விழுங்காய்கள் பாக்குப்பழங்களை உதிர்க்க அவை கீழே விழுங் காலத்தே வாழைப்பழங்களைப் பொய்கைகளிலே உதிர்ப்பதால் அச்சமெய்திய வாளை மீன்கள் தாமரை மொட்டுக்களைத் தாக்கி அவற்றின் பாங்கிலுள்ள தவளையின் வாயில் தேனைச் சொரிவித்தலாகிய நயம் கற்பவர்க்கு அளவில் இன்புந் தருவது.

இனி, செவிக் கின்பம் பயக்கும் இனிய ஓசைகள் பயில்கின்ற திருப்பாசுரங்கள் ஆசிரியர் திருப்பதிகங்களிலே மிக்குள்ளன. ஒலியாற் பொருள் குறிக்கும் சொல்நயம் அவைகளில்மலிந்து காணப்படும்.

உதாரணம்:—

'தண்ணிதாய வெள்ளருவி சலசலநுரை மணிததும்ப'

'வெண்ணிறத் தருவிக டிண்ணெென வீழும்'

'தந்தத் திந்தத் தடமென்ற ருவித்திரள் பாய்ந்து'

அருவியின் முழக்கம் மணப்பறை முழக்கமாக வும், குயிலின் குரல் குழலொலியாகவும், வண்டின் இம்மென்ற மெல்லோசை செவ்வழிப் பண்ணாகவும் உருவகித்துக் கூறிய பகுதிகள் பல.

தண்ணிய நறும் பூக்களின் வாசனையால் மகிழ்ந்து பாடும் குயிலோசையும், பெண்களது கிளி மொழியும், வீணையின் இசையும், பிற இசைகளும் கலந்து எழுகின்ற ஓசைச் சீர்மை அவற்றின் ஒற் றுமை வேற்றுமை நயங்கள் விளங்கும் வண்ணம் அமைத்துக் காட்டிய செய்யுளடிகள் பின்வருமாறு காண்க.

" வாசமலர் கோதுகுயில் வாசகமும் மாதரவர்
பூவை மொழியும்
தேசவொலி வீணையொடு கீதமலி தேவூரதே "

தேனூறும் தமிழ்மொழியானது இனிய குரல் உடைய மாதர்கள் நாவில் பயில்வதால் இயற்கை யினிமையொடு செயற்கை யினிமையும் பெற்றுத் திகழ்தல் ஒரு நயம். அதனோடு அம்மாதர் மழலைச் சொல்லும் பிறநாட்டு ஆடவர்கள் மரக்கலங்களில் வந்து தங்கி தமது தொழிலின் பொருட்டுத் தமிழ் மக்களிடத்தே பேசும் வழுச்சொல்லும் முறையே இன்சுவைக் கனிவும், நகைச் சுவைப் புதுமையும் கலந்தூட்டி இன்பம் பயக்கும் அழகு பின்வரும் அடிகளிற் காண்க.

'ஊறு பொரு ளின்றமி ழியற்
கிளவி தேரு மடமாதருடனார்
வேறு திசை யாடவர்கள் கூறவிசை
தேருமெழில் வேதவனமே'

இனி, மாடுமேய்க்கும் ஆயன், காணாது மறைந்து நின்ற கால் நடைகளைக் குழலூதுவதனால் தான் நிற்கு மிடத்தே ஈர்த்துக் கொள்ளும் நயத்தினை,

"கனைத்த மேதி காணா தாயன் கைமேற் குழலூத
அனைத்துஞ் சென்றங் கணையுஞ் சோலை யண்ணா
மலையாரே"

என்ற அடிகளிற் பெறவைத்தனர்.

கண்ணிற்குஞ் செவிக்கும் ஒருங்கே இன்பம் பயக்கும் காட்சி நயங்கள் சில திருப்பாட்டுக்களில் இயைந்து தோன்றும். கண்க ளடர்ந்த அழகிய தோகையையுடைய நீல மயிலானது வண்டு இன்னிசை முரலவும், கடலும் மேகமும் பெருமுழக்கஞ் செய்யவும், திருவெண்காட்டு வானளாவிய சோலைகளிலே நடனஞ் செய்யுங் கண்கவர் காட்சியானது அனைய தன்மைத்து.

'கண் மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடல்முழங்க
விண் மொய்த்த பொழில்வரி வண்டு இசைமுரலும்
வெண்காடே'

இனி, கனிகளின் இனிய ரசமும், அதனினு மினிய தேனும் எப்பொழுதும் நாவினில் சொட்டிக்

கொண்டிருக்கும் பொழில் நீழலிலே சிறிது அமர்வோமாக.

'குலைவாழைத் தீங்கனியு மாங்கனியுந் தேன்
பிலிற்றும் குறும் பலாவே'

'பாடெலாம் பண்ணையின் பழம்விழப் பைம்பொழின்
மாடெலா மல்குசீர் மாமழ பாடியே'

"பெய்பூம் பாளை பாய்ந்திழி தேறல் பில்குபெருந்
துறையாமே"

"நலமஞ்சுடைய நறுமாங் கனிகள் குதிகொண்
டெதிருந்திப்
பலவின் கனிகள் திரைமுன் சேர்க்கும்
பழன நகராரே"

'கொக்கினிய கொழும் வருக்கை கதலிகமு
குயர்தெங்கின் குவைகொள் சோலை
முக்கனியின் சாறொழுகிச் சேறுலரா
நீள்வயல்சூழ் முதுகுன்றமே"

மூக்கினல் மோந்து நுகரும் இன்பத்தை நினைவூட்டும் செய்யுட்கள் பல. பூந்தேனின் புதுமணத்தான் மாத்திரமல்லாமல் வகுளம், செண்பகம், மல்லிகை, காந்தள், செருந்தி, தாழை முதலிய நன்மலர்களின் நறுமணத்தானும் ஆசிரியாது பாடல்கள் நிறைந்துள்ளன. அவை பின்வருஞ் செய்யட்களால் தெளிவாகும்.

'கோடுமலி ஞாழல் குரவேறு சுரபுன்னை
நாடுமலி வாசமது வீசிய நள்ளாறே"

'மரவத்தொடு மணமாதவி மவ்வலதுவிண்ட
குரவத்தொடு விரவும் பொழில்'

'எண்டிக்குங் கமழ்ந்திலங்கு சந்தனக்
காடார் பூவார் சீர்மேவும்.''

உடம்பிற் படுதலால் இன்பம் பயக்கும் பொருள்களின் சிறப்பும் ஆசிரியரது தேவாரங்களிற் பொலிவுபெறக் காணலாம். உயர்ந்த மலைகளிலும், தாழ்ந்த பள்ளத்தாக்குக்களிலும், மருத நிலப் பொழில்களிலும், கடற்கரைக் காவுகளிலும் பரவிச்சென்று அங்குள்ள நறுமணங்களைக் கவர்ந்து வந்து தாமரைப் பூவின் பொற்பொகுட்டில் வீற்றிருக்கும் காதல் தூதாகிய அன்னத்தைத் துயில்கொள்ளும் வண்ணம் தாலாட்டும் இளந்தென்றலைப் பற்றிய வருணனை படிப்பவரது உள்ளத்தையும் உடலையும் குளிர்ந்து மிளிரச் செய்யும் பான்மையது.

தமிழ்ப்பா நயம் நன்கு விளங்கும் திணையொழுக்கத்திற்கும் திணைமயக்கத்திற்கும் சிறந்த எடுத்துக்காட்டுக்கள் ஆசிரியரது தேவாரங்களில் மலிந்துள்ளன. பாவிற் சொல்லப்படும் பொருள் அது தோன்றும் இடத்திற்கு ஒத்ததாக அமையவேண்டுமென்பது திணையொழுக்கத்தின் சீர்மையதாகும். ஒரே நிலத்தில் பல நிலத்து வெவ்வேறு பொருள்களும் கலந்து தோன்றுவதாலும் சிறப்பாக இன்பந் தருவதாலும் கற்பனை நயத்திற்கு இடந்தருவதாலும் திணை

மயக்கமானது செய்யுட்கு ஓர் சிறந்த அணியாக அமைந்துள்ளது.

கடற்கரைத் தோப்புக்களில் புன்னை மரங்களும் தாழை மடல்களும் செறிந்து மணம் வீசுவதும், மணிகளும் மீனேடுகளும் அலைகளினின்று கரையில் ஒதுங்கி வருவதும் பல இடங்களில் பரக்கக் காணலாம்.

நாரையும், அன்றிலும், குருகும் அவைபோன்ற நெய்தல் நிலப் பறவைகள் பலவற்றின் வருணனையும் பல பாடல்களிற் காணலாம். பவளங்களும் முத்துக்களும் தாழை மடலினும் செழிப்புள்ள புன்னை மரத்தின் நிழலினும் விரவிக் கிடப்பதும் அன்னங்கள் தங்கள் பெண்பறவைகளோடு அவற்றினடுவே விளையாடுவதும் கடற்கரையின் கண்ணுள்ள இயற்கைச் செல்வ வளத்தை இனிதெடுத்துக் காட்டுகின்றது.

‘மடலிடைப் பவளமும் முத்தமுந் தொத்துவண்
புன்னை மாடே
பெடையொடுங் குருகினம் பெருகுதண்
கொச்சையே பேணு நெஞ்சே’

‘பாரல்வெண் குருகும் பகுவாயன நாரையும்
ஆரல்வெண் டிரைவா யிரைதேரும்’

‘வண்டலம் வங்கமுஞ் சங்கமுஞ் சுறவு மறிகடற்
றிரைகொணர்ந் தெற்றிய கரைமேற்
கண்டலுங் கைதலு நெய்தலுங் குலவும்’

நெய்தல் நிலப் பெண்கள் தாழையினது வெண் மடலைக் கொய்து விளையாடும் வனப்புத் திருச்சாய்க் காட்டுத் தேவாரத்தில் வியக்கப்பட்டிருக்கிறது.

"மாழை யொண்கண் வளைக்கை நுளைச்சியர் வண்பூந்
தாழை வெண்மடற் கொய்து கொண்டாடு சாய்க்காடே."

நெய்தல் நிலமானது தலைவி பரிவு கூறுதற்கு உரிய இடமாதலால் அந்நிலத்திற்கு உரிய அன்றில் தூதுவிடும் புள்ளாகக் கொள்ளப்படும். கழி சிறிது பிரிவுறினும் நனிமிக வருந்துதலால் புணர்ச்சி நயம் நன்குணர்ந்த அன்றில் தூதிற்கு உரியதாயிற்று. அது பின்வருந் தேவாரத் திருப்பாட்டிற் காணப் படும்.

"முன்றில்வாய் மடற்பெண்ணைக் குரம்பைவாழ் முயங்கு
அன்றில்காள் பிரிவுறுநோ யறியாதீர் மிகவல்லீர் [சிறை
தென்றலார் புகுந்துலவுந் திருத்தோணி புரத்துறையுங்
கொன்றைவார் சடையார்க்கென் கூர்பயலை கூறிரே"

தலைவி கண்ணெதிரே அவள் முற்றத்திலுள்ள தாழை மடலில் ஆணும் பெண்ணுமாக அன்றில் பல முயங்கி வாழுங் காட்சி காதல் நோயைப் பெருக்குத லானும் அவை பிரிவாற்றாது வருந்தும் தன்பாற் சற்றும் இரங்கி தனது தலைவனைத் தன்னிடம் சேர்க்க முயலாது தாம் மாத்திரையே பெரும் போக நுகர்த லானும் எப்போதும் அவை இணைபிரியாது வாழ்த லால் பிரிவாற்றாமை உணராமையானும் வன்மன முடையவை என்னும் குறிப்பு அவற்றிற்கு உணர்த்தி

தூதுசெல்விப்பான் 'பிரிவுறுநோ யறியாதீர் மிகவல் லீர்' என்றூர். பிரிவுறு நோய் தென்றலால் தனக்கு மீக்கூர்தலால் அவை தூதுபோதல் இன்றியமையாத தென்பார் 'தென்றலார் புகுந்துலவும்' என்றூர். பிரி வுற்றிருத்தற்குக் காரணம் தலைவன் என்பது குறிப் பான், அங்ஙனம் இருத்தற்கு இடமாகிய முல்லைக் குரிய கொன்றையணிந்த தலைவர் என்றனர்.

இனி, மருத நிலத்தினைப் பொருள் கூறும் பகுதி சில ஆயத்தக்கன. அந்நிலப் பெருஞ் செழிப்பை ஆண்டுள்ள மேதியின் வைத்துப் பின்வருமாறு இனி துணர்த்துகின்றூர்.

"மேய்ந்திளஞ் செந்நெல் மென்கதிர் கவ்வி
செந்நெல் மேற்படுகலின் மேதிவைகறை
பாய்ந்த தண் பழனம்"

மேதி "முறித்து மேதிகள் கரும்புதின் றூவியின் மூழ்கி
வெறித்துப் பாய்வயல்"

மேதி, செந்நெல், வயல், கரும்பு முதலியன போல பொய்கை, தாமரை, கழுநீர், வாளை மீன் என் பனவும் மருத நிலத்திற்குரியனவே. அகழி கடல் போல்வதாகலின் நெய்தல் நிலப் பறவையாகிய அன். னம் அதன் சார்பாக மருதத்துங் கூறப்படும். தாரா வின் வகையெனு அன்னத்தைக் கருதி அதை மருத நிலக் கருப்பொரு ளென்பாருமுளர். இவையாவும் பின்வரும் அடிகளிற் காண்க.

தாமரை வாளை "அரிந்த வயலரவிந்த மதுவுகுப்ப வதுகுடித்துக்
களித்து வாளை
கருஞ் சகட மிகைவளர் கரும்பிரிய வகம்
பாயுங் கழுமலமே"

கழுநீர் "தெரிந்திலங்கு கழுநீர் வயற் செந்நெல்"

பொய்கை ஆறு "பொய்கையின் பொழிலுறு புதுமலர்த் தென்
வைகையின் வடகரை" [றலார்

"புண்டரீக மலர்ப் பொய்கை நிலாவும் புகலியே"

காஞ்சி "பொன்னங் காஞ்சி மலர்ச்சின்ன
மாலும் பூம்புகலியே"

அகழி "ஆவிக்கமலத் தன்னம் வைகு மகழிசூழ்
காவிக் கண்ணார் மங்கல மோவாக் கலிக்காழி"

முல்லை நில விலங்குகளாகிய மான், முயல் முதலியனவும், கொன்றை, குருந்து முதலிய பூவகைகளும் முல்லைநிலச் சார்பாகக் கூறப்பட்டுள்ளன.

உழை "கானமான் வெருவுற"

முயல் ".........புனற்படப்பைத் தடத்தருகே
முயலோட வெண்கயல் பாய்தரு"

கொன்றை "கொன்றையந் தென்றலார்ந்த
............புறவார் பனங்காட்டூர்"

குருந்து "குருந்து முல்லை கொடிவிடும்"

பாலை நெய்தலாகப் பாடிய திருநனிபள்ளித் தேவாரத்திலொழிய பிற இடங்களில் அதன் வரு

னனை காணப்படுதல் அரிது. ஆயின் பாலை யாழென்
பது பல இடங்களிலும் விதந்தோதப்படுகிறது.

(உ-ம்) "பாலையாழ்ப் பாட்டுகந்தான் பசுபதீச் சாத்தானே"

"பாலையாழ் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே"

பாதிரி, மரா, குரா என்னும் பாலை நிலத்திற்
குரிய மரங்கள் சிற்சில இடங்களில் கூறப்படுகிறது.

(உ-ம்) 'கரியினொடு பூவையரியினமும்
வெருவுகா ளத்திமலையே'

மா-யானை புலி "எனத்திரளோ டினமான் கரடி
காடி, பன்றி யிழியும் விரிசாரல்"

புள்-கிளி. "ஏனமின மானினொடு கிள்ளைதினை கொள்ள
வெழிலார் கவணினாற்
கானவர்மா மகளிர் கனகமணி விலகு
காளத்தி மலையே"

மயில் "மயில்புல்கு தண்பெடையோ
டெனாடும் வண்சாரல்"

அகில், ஆரம் "சந்தமாரகிலொடு சாதிதேக்குமா
முந்துமாமுகலி"

தேக்கு திமில் "தேக்குந் திமிலும் பலவுஞ் சுமந்துந்தி"
முதலிய "நகாரமோ டேலம் மணி"

காந்தள் "மதுவாய செங்காந்தண் மலர்நிறையக் குறையில்லா
மூங்கில் முதுவேய்கண் முத்துதிரும் பொழில் முதுகுன்றம்"

வேங்கை "வேங்கைகணிலாவு காளத்திமலையே"

அருவி, சுனை "அலைகொள் புனலருவி பலசுனைகள்
வழியிழிய"

குறவர் "திறங்கொண் மணித்தரளங்கள் வரத்திரண்டங்
கெழிற் குறவர் சிறுமிமார்கள்
முறங்களினாற் கொழித்துமணி
சிலவிலகி முத்துலைப்பெய்"

திணைமயக்கத்திற்கு எடுத்துக் காட்டுக்களும் மிகுதியாக இவ்வாசிரியர் தேவாரத்துட் காணப்படும்.

மருத நெய்தல் "ஆகாஞ் சேரிப்பி முத்தை யந்தண் வயலுக்கே
சாகரஞ்சேர் திரைகளுந்து"

குறிஞ்சி முல்லை "செல்வமல்கு செண்பகம் வேங்கை சென்றேறி
கொல்லை முல்லை மெல்லரும் பீனுங் குற்றாலம்"

குறிஞ்சி நெய்தல் "நீல நெய்தல் தண் சுனை சூழ்ந்த நீள்சோலை"

குறிஞ்சி மருதம் "மும்மென் றெழுமருவித் திரள்வரை
வுரைமேல் பற்றிட
விம்மும் பொழில் கெழுவும் வயல்
விரிநீர் வியலூரே"

குறிஞ்சி பாலை "தாவஞ் சுரபுன்னை குளிர்கோங் கிளவேங்கை"

பாலை நெய்தல், "தாவங் குருக்கத்தி கள்புன்னைகள் ஞாழல்"

முல்லை மருதம் "கொங்கார் கோன்றை வன்னிமத்
தங்குளிர் போய்கை"

முல்லை நெய்தல் "முறிகொணுழன் முடப்புன்னை
முல்லை முகை வெண்மலர்"

பாலை மருதம், "மரவஞ் சூழ் பொழி லேகம்பம்
குரவப் பாவை முருகமர் சோலை"

குறிஞ்சி, "கருமைகொள் வடிவொடு சுனைவளர் குவளைக்
மருதம், கயலினம் வயலிளவாளைக ளிரிய
நெய்தல், எருமைகள் படிதர விளவன மாலு
பாலை மிடைச்சுர மேவிய விவர்வண மென்னே'

குறிஞ்சி, "கோங்கிள வேங்கையுங் கொழுமலர்ப்
நெய்தல், புன்னையும்
முல்லை, தாங்குதேன் கொன்றையுந் தகுமலர்க்
பாலை குரவமும்"

இதுகாறும் ஐம்புலன்களுக்கும் இனிமை பயக்கும் இயற்பொருள்களை ஆய்ந்தனம். இனி, ஆயுமறிவிற்கும் உணர்ச்சிக்கும் வியப்பு, பெருமிதம் முதலிய எண்வகைச் சுவைகளையும் விளைத்து இன்பந் தரவல்ல திருப்பாடற் பகுதிகள் கருதுதற் குரியன. திங்களைச் சென்று தாக்குவது போன்ற பொழிலகத்தே வளர்கின்ற கிளிகள் கேட்டதைக் கேட்டவாறு கிளக்கும் ஆற்றலுடைமையால் மக்கள் பயில்கின்ற அறுபத்தினன்கு நுண்கலைகளையும் தாமும் பயிற்சிசெய்கின்ற இயல்பினைக் கூறும் பகுதி அறிவிற்கு வியப்புமிக்க நயந் தருவதாகும். அது,

"வட்டமதி தட்டுபொழி லுட்டமது
வாய்மைவழு வாதமொழியாற்
சட்டகலை யெட்டுமரு வெட்டும்வளர்
தத்தைபயில் சண்பைநகரே"

அவ்வாறே வண்டுகள் பண்ணின் நயமுற நேரிசை பாடுவதும் வியத்தற் குரியது.

"பண்டான் கொண்டு வண்டுபாடும்"

"நேரிசை பாணில் யாழ்முரலும்".

யானையும், குரங்கும் மக்கள் போல் அறிவுடைய வாகச் சில பாடல்களிற் கூறும் உயர்வு நவிற்சியும் பாராட்டத் தக்கது. பெருமிதச் சுவையானது அச்சத்தை மாத்திரமே அடிப்படையாகக் கொண்டதன்று. அச்சமாத்திரம் இருக்குமாயின் அழகும் இனிமையும் தோன்ரு. பேராற்றலும் பேரழகுமுடைய உயர் பொருள்கள் காட்சியளவில் உள்ளம் நிரம்பிய அச்சவுணர்வினைத் தந்து, பின்னர் தமது உளங்கவர் நயத்தினுல் உயிரறிவினைத் தன்பா லீர்த்து இணக்கஞ் செய்யுந் தன்மையன. பல்வகை யுயிர்த்திரளும் பல்கிப் பெருகி வளர்த்துத் திரிவதற் கிடமாய் நிலத்தையும் வானையும், தமது பெருந் தோற்றத்தால் ஒன்று சேர்த்துக் காட்டுவதாய்க் கடலினு மிக்க முழக்கமு மதிர்ச்சியு முடையதாய் அரிய பெரிய யானை முதலியவற்றையும் அச்சுறுத்திப் பாய்ந்து செல்லும் மலைவீழருவியின் தோற்றம் அளவில் பெருமிதங் காட்டும் இயல்புடையது. பெருமிதச் சுவைக்கு அஃதே சிறந்த எடுத்துக் காட்டு. அது,

"மண்ணினைமூடி வான்முகடேறி மணிதிரைகடன் முகந்தெ
விண்ணள வோங்கி வந்திழியருவி" [டுப்ப

என்ற விடத்துக் காண்க.

வான்வரை வளர்ந்தோங்கிய மாவும், வாழையும், பலாவும், மகிழும், மாதவியும் உடைய பெருஞ்

சோலையகத்தே செழித்துப் பொங்கித் ததும்பும் இனிய தேனினைக் கவலையில்லாமல் உண்டு களித்து அங்ஙனம் உண்ட மயக்கத்தால் பாடிக்கொண்டு களி பெருஞ் செல்வர் கள்ளாட்டயர்ந்தாலன்ன பொலி வினையுடைய வண்டுகள் நிலவி வாழு மியல்பினைக் கூறும் பகுதி, பொழிலின் பெருமித வளத்தை ஒரு பாலுணர்த்தி, செல்வரையும் விண்ணவரையும் போல வண்டுகளும் இறுமாந்து வாழ்கின்றன என்னுங் குறிப்பால் நகைச்சுவைச் சார்பாய இன்ப வுணர்ச்சியை யும் நல்குகின்றது.

"வம்பார் குன்றம் நீடுயர்சாரல் வளர்வேங்கைக்
கொம்பார் சோலைக் கோலவண் டியாழ்செய் குற்றாலம்"

" வானளவு சூதமிள வாழைமகிழ் மாதவி பலாநிலவிவார்
தேனமுது வுண்டுவரி வண்டுமருள் பாடிவரு தேவூரதே"

அவ்வாறே மேகங்கள் உயர்ச்சி மிக்க நெடிய மரப் பொழில்களில் வந்து படியவும் ஏணிபோன் றுயர்ந்த கரும்பின் கணுக்களைப் பிடித்தேறி மந்திக் கூட்டங் கள் முகில் மேடையைச் சேருந் தோற்றம் அவற்றின் பெருமித வாழ்க்கையையும் வலிமையையும் கவலை யற்ற உள்ளப் பெரும் போக்கினையும் எடுத்துக் காட்டி அகமகிழ் வளிக்கின்றது.

"கொண்டலார் வந்திடக் கோலவார் பொழில்களிற் கூடிமந்தி
கண்டவார் கழைபிடித் தேறிமா முகிலினைக் கதுவு
கொச்சை"

வேள்விப் புகை போய் வானளாவிய சோலையின் மீது முகில்போலப் படிவதால் அதனை முகிலென எண்ணி மயில்கள் மகிழ்ந்தாடுந் தோற்றம், பெருமிதத்தையும் நகைச்சுவையையும், பேரழகையும் ஒருங்கு நல்கும் இயல்பிற்று.

"மானபுகழ் வேதியர்க ளாகுதியின் மீதுபுகை போகியழகார்
வானமுறு சோலைமிசை மாசுபட மூசுமயி லாடு துறையே"

மலையின் உயரத்தைப் பற்றிக் கூறுமிடங்களில் பெருமிதச்சுவை மிக்குக் காணப்படும். மேக மண்டிலத்தைக் கடந்து அப்பாற் சென்று வளைந்த மதியின் பிறையைத் தாக்கிச் செல்லும் தோற்றமும் உயர்வும் உடைமை காரணமாக குளிர் மிகுந்து பனிமூடப் பெற்று நிலவொளியாற் றிகழும் மலையென்பார்,

"வானிற் பொலிவெய்தும் மழைமேகங் கிழித்தோடிக்
கூனற் பிறைசேருங் குளிர்சாரற் கொடுங்குன்றம்"

என்றார்.

இடியின் முழக்கத்தால் கூகைக் கூட்டங்கள் ஓட்டெடுப்ப யானையும் அடலேறும் அதிர்ந்தோடும் உயர் சிகரத்தே ஊற்றெடுத்து மணியும் பொன்னும் முகில் சிதறிய முத்தும் வாரிக்கொண்டு, யானை மருப்பு, சந்தனம், அகில், கோங்கு, குரவம், புன்னை, வேங்கை முதலியவற்றின் பூக்களும் விரவப் பெற்று மலையினின் றிழிந்து; நானிலத்துள்ள முல்லை, பாதிரி, குரவம், புன்னை முதலியவற்றின் மலர்களும்; வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி முதலிய பழங்களும் மோதி

எறிந்துகொண்டு; மலைத்தேனும், மயிற் றோகையும், முகில் நீரும், முத்தும், கடலுடைப் பண்டமும் கலந்து பெருக்கெடுத்தோடுதலினாலே மேகமண்டிலத்தையும், கடலையும், நானிலத்தையும் ஒன்று சேர்க்கும் தோற்ற முடைய பேரியாற்றின் கழிபெரும் போக்கினை காவிரி யில் வைத்து நமதாசிரியர் விளக்கியருளினது யாவ ருள்ளத்தையும் பெருமித வுணர்வான் நிறைக்க வல் லது. அது திருமாந்துறை, திருவடகுரங்காடுதுறை என்னுந் தலங்கட்குரிய தேவாரப் பதிகங்களிலினிது காணப்படும்.

உதாரணம்:

"செம்பொனார்தரு வேங்கையு ஞாழலுஞ் செருந்தி செண்பக [மானைக்
கொம்புமாரமு மாதவி சுரபுனை குருந்தலர் பரந்துந்தி
அம்பொனேர் வருகாவிரி"

"விளவு தேனொடு சாதியின் பலங்களும் வேய்மணி நிரந்துந்தி
அளவி நீர்வருங் காவிரி"

"கோடுதேன் சொரிகுன்றிடைப் பூகமுங் கூந்தலின் குலை [வாரி
ஓடுநீர் வருகாவிரி"

"இலவ ஞாழலு மீஞ்சொடு சுரபுன்னை யினமரு திலவங்கம்
கலவி நீர்வரு காவிரி"

"கோங்கு சண்பகங் குருந்தொடு பாதிரி குரவிடை மலருந்தி
ஓங்கிநீர் வருகாவிரி"

"பெருகு சந்தனங் காரகில் பீலியும் பெருமர நிமிர்த்துந்திப்
பொருது காவிரி"

" நறவமல்லிகை முல்லையு மௌவலு நாண்மல ரவைவாரி
இறவில் வந்தெறி காவிரி "

" மந்தமார் பொழின் மாங்கனி மாந்திட மந்திகண் மாணிக்கம்
உந்திநீர் வருகாவிரி "

"மேகத்திடி குரல் வந்தெழ வெருவிவ் வரையிழியுங்
கூகைக் குலமோடித் திரிசாரற்"

"பருமா மதகிரி யோடரியிழியும் விரிசாரற்
குருமாமணி பொன்னோடிழி யருவி"

"கோங்கமே குரவமே கொழுமலர்ப் புன்னையே
[கொகுடிமுல்லை
வேங்கையே ஞாழலே விம்முபா திரிகளே விரவியெங்கும்
ஓங்குமா காவிரி"

"மந்தமா யிழிதரக் களிற்றிள மருப்பொடு பொருப்பினல்ல
சந்தமா ரகிலொடு சாதியின் பலங்களுந் தகையமோதி
உந்துமா காவிரி"

"முத்துமா மணியொடு முழைவள ராரமு முகந்துநுந்தி
யெத்துமா காவிரி"

"கறியுமா மிளகொடு கதலியின் பலங்களுங் கலந்துநுந்தி
யெறியுமா காவிரி"

"கோடிடைச் சொரிந்த தேனதனொடுங் கொண்டல்வாய்
[விண்ட முன்னீர்
காடுடைப் பீலியுங் கடலுடைப் பண்டமுங் கலந்துநுந்தி
ஓடுடைக் காவிரி"

பொழிலினைப் பற்றி வளமிகுந்த வருணனை பல
விடங்களிற் காணப்படுகின்றது. ஐந்திணை களினு

முள்ள பொழில் வளம் இத் திருநெறித் தலைவர் தேவாரத்திற் காணப்படுகின்ற வளவு, தமிழிலக்கியத் திலே வேறொன்றிலுங் காண்பதரிது. ஆறும் மலை யும் எவ்வாறு பெருமிதத்திற்குத் தலைமையான எடுத் துக் காட்டாக இத்திருப்பாட்டுக்களுள் இலங்குகின் றனவோ அவ்வாறே கண்கவர் வனப்பிற்கும் உளங் கவர் இன்பச் சுவைக்கும் உறு நிலையமாகப் பொழில் நலம் விளங்குகின்றது. அவை பின் விரிப்பாம்.

எத்தன்மைத்தாய விண்ணவரும் உறைகின்ற இடம் பொழிலேயாம் என்பார்,

"பாலுந்துறு திறளாயின பரமன் பிரமன்றான்
போலுந்திற லவர்வாழ்தரு பொழில்"

என்றார்.

சிற்றுயிர்களது விளையாட்டு மகிழ்ச்சியினை சில இடங்களில் மிக நயம்பெறக் காணுதல்கூடும். மூங்கில் கள் வளர்ந்து நிற்பதனால் அவற்றில் சிறு குரங்குக ளேறி நடனஞ் செய்கின்ற காட்சியும்; சந்தனமரத் தளிர்களை மலைச் சோலைகளில் உலாவிப் பிடுங்கித் தின்று பெண்யானைகள் தமது கன்றினோடு விளையாடு வதும்; சிங்கம், யானை, பன்றி முதலிய விலங்குகள் மலையுச்சியிலுள்ள குகைகளில் தமது பெண்க ளோடு கூடி விளையாடுவதும் பின் வருஞ் செய்யுட் களில் கூறப்படுவது காண்க.

"திருகல் வேய்கள் சிறிதே வளையச் சிறுமந்தி
முருகின் பணைமே லிருந்துநடஞ்செய் முதுகுன்றே"

"குன்றின்மலி துன்றுபொழி னின்றுகுளிர்
சந்தின்முறி தின்று குலவிக்
கன்றினொடு சென்றுபிடி நின்றுவிளை
யாடுகா ளத்தி மலையே"

"மலைத்தலை வகுத்தமுழை தோறுமுழை வாளரிகள் கேழல் [களிறு
குலைத்தலை மடப்பிடிகள் கூடிவிளை யாடிநிகழ் கோகரணமே"

பேராற்றலாற் செருக்கித் திரியும் மத யானை யானது தன்னினும் வலிய யாளி வரவினை யஞ்சித் தன்னுடைய கொம்பினாலே பாறையைக் குத்தி அப்பொழுது தோன்றும் பெரும்புடையினில் ஒளித்து வைகும் செயலானது யானையின் பெருந்திறலையும் எத்துணை வலிமையுடையார்க்கும் அவர் அஞ்சத்தக்க பெரியர் உண்டென்னும் உண்மையு முணர்த்தி அச்சத்தையும் வியப்பையும் ஒருங்குணர்த்தும் பான்மையது.

"மத்தக் களிறுளிவ் வரவஞ்சி மலைதன்னைக்
குத்திப் பெருமுழை தன்னிடை வைகுங் கொடுக் குன்றம்"

வலியார் முன் எளியார் அச்சுற்று விலகுங்கால் அது காண்பார்க்கு இரக்கமுண்டாகுந் தன்மையதென்பதை பின் வருபவற்றுட் காண்க.

"கானமான் வெருவுறக் கருவிரலூகம் கடுவனொடு
கெளுமூர் கற்கடுஞ் சாரல்"

"கருமைகொள் வடிவொடு சுனைவளர் குவளைக்
கயிலினம் வயலிள வாளைகளிரிய
எருமைகள் படிதர விளவன மாலும்"

இவ்வடிகளில் மான் அஞ்சும்படியாக கொடுந்தொழில் புரியும் நகத்தையுடைய புலியும் குரங்கும் மலைச் சாரலிலே உலாவுதலும் அச்சுறுத்துதற்குரிய கருநிற மும் பெருவடிவமுமுடைய எருமைகள் சுனைகளிலே படியுங்கால் கயல்மீன்களும், வாளைமீன்களும் ஓடி விட குவளைப்பூவின் பாங்கருள்ள இள அன்னமானது விரைந்து இயங்க வியலாது மயங்குதலும் கூறப்பட் டன.

உயிரில்லனவும் உயிருள்ளனவாகத் தோன்று வதைக் குறித்து நகைச் சுவையைப பின்னவற்றின் வைத்துக் காட்டிய சிறப்பு திருவெண்காட்டின் கடற் கரைக் குளிர் சோலையில் மடல்விரிந்த முடத்தாழை யின் நிழலை அன்னமென்று அஞ்சி பொய்கையின் கண்ணுள்ள கெண்டை மீனானது தாமரைப்பூவினடி யில் ஒளித்துக்கொள்வதைப் பார்த்து கடலினால் ஒதுக்கப்பெற்ற ஒளி பொருந்திய முத்துக்கள் சிரிப் பதுபோலுங் காட்சி வருந் தேவாரத்துட் காண்க. மருத நெய்தல் திணை மயக்கமும் ஆண்டு ஒத்துணர்க.

"விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் றண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்த நகைகாட்டுங் காட்சியதே"

ஒன்றைப் பிறிதொன்றாகக் கருதி மயங்குவது காரண மாக எழுகின்ற நகைச் சுவையானது வருஞ் செய்யு ளிற் காண்க.

"வலம்வந்தமடவார்கணடமாடமுழவதிரமழையென்றஞ்சிச்
சிலமந்தியலமந்துமரமேறிமுகில்பார்க்குந் திருவையாறே"

நமதாசிரியரது சில திருப்பாட்டுக்களில் காதற் சுவை கனிந்து விளங்குகின்றது. தமது பெண்டிரொடு கூடிவிளையாடுவதில் குரங்குகள் வேட்கையுடையன என்பது,

"குரக்கினம் விரைப்பொழி லின்மீது கனியுண்டு
பரக்குறு புணர்ச்செய் விளையாடு பழுவூரே".

திருப்பாடல்களில் மிகுதியும் பயின்று வருகின்ற சிறு பறவை, வண்டாம். பெண்வண்டு புன்னைப் பூவின் கருந் துகளில் திளைத்தாடும் தனது தலைவனைக் கண்டு பிறிதொரு வண்டினிடம் தலைவன் காதல் கொண்டதாக நினைத்துச் சினங்கொண்டு சோலையின் ஒரு புறம் மறைந்து அவனோடு ஊடல் கொள்ளுவதாகக் கூறும் பகுதி மிக நயமுடையது.

"மாதர்வண்டு தன்காதல் வண்டாடிய புன்னைத்
தாதுகண்டு பொழிலின் மறைந்தூடு சாய்க்காடே".

மானும் மயிலும் உள்ளத்தையும் காட்சியையும் தாமே மகிழ்விக்குந் திறமையன. அவைகள் தமது துணைகளோடு இலை செறிந்த பசும்பொழில்களிற் கூடியாடும் சிறப்பு பின்வரும் அடிகளிற் கூறப்பட்டிருக்கிறது.

"கலையினார் மடப்பிணை துணையொடு துயிலக்
கானலம் பெடைபுல்கிக் கணமயிலாலும்
இலையினார் பைம்பொழில்"

மென்மையும் அறிவும் மிக்க அன்னம் காதல் மிகையால் செய்யும் நகையுறு செயல் பின்வரும் அடிகளிற் குறிக்கப்பட்டிருக்கிறது. அறிவாளரும் காதலால் அறிவிழப்பர் என்பது குறிப்பு.

"ஏழை வெண் குருகய லேயிளம் பெடை தனதெனக் கருதித்
தாழை வெண்மடற் புல்குந் தண்மறைக் காடுறை மைந்தர்"

இதனுள் அன்னமானது தாழையின் வெண் மடலை பெண் குருகென்று மயங்கி அதனைப்புணருஞ் செயல் காண்க. தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவாற் றுமை காரணமாக மக்களையேயன்றி அஃறிணைப் பொருள் பலவற்றையும் நெஞ்சினையும் தலைவனிடத் தே தூது விடுதல் பண்டைவழக்கு. அது,

"ஞாயிறு திங்க ளறிவே நாணே
கடலே கானல் விலங்கே மானே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவு நுவலிய நெறியாற்
சொல்லுந போலவுங் கேட்குந போலவும்
சொல்லியாங் கமையு மென்மனார் புலவர்"

என்பதால் விளங்கும்.

ஆசிரியர் திருப்பாட்டுக்களில் நயமிக்க பல வகைப் பறவைகளைத் தூது விடுதல் காணப்படும். கிளியுரை:—

"சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனொடுபான்
முறையாலே யுணத்தருவேன் மொய்பவளத் தொடுதாளந்
துறையாருங் கடற்றோணி புரத்தீசன் றுளங்குமிளம்
பிறையாளன் றிருநாம மெனக்கொருகாற் பேசாயே"

வீட்டிலே வளரும் கிளிகள் தலைவன் முதலியோர் பெயரைச் சொல்லும் பழக்க முடையது ஆதலினாலும் தலைவன் பெயரைத்தான் கூறவொண்ணாமையால் அதனைப் பலர்கூறக் கேட்டு இன்புறுதல் தலைவிக்கு இயல்பாதலினாலும் கிளியினைத் தலைவர் பெயர் கூறும்படி இதனுள் தலைவி வேண்டி நின்றமை காண்க.

தலைவன் பெயர் கூறுவான் ஊக்கமளித்தற் பொருட்டு அழகிய சிறகும் இளமையும் உடையதாகக் கிளி புகழ்ந்துரைக்கப் பட்டது. தலைவன் பெயரைச் சொல்லுகின்ற நாவிற்கு இனிய உணவு அளிக்குங் கருத்தினால் தேனும் பாலும் சுவை மிகப்பயக்கும் அளவாகக் கலந்து தருதல் கூறப்பட்டது.

தலைவனுடைய திருநாமமும் அவ்வாறு இனிமை பயக்கும் என்பது குறிப்பால் உணர்த்தப்பபட்டது.

நெய்தல் நிலமாகிய கடற்கரை பரிவுறுதற்கு இடமாதலின் அப்பரிவு தீரும் வண்ணம் தலைவன் பெயர் கேட்டல் விரும்பப்பட்டது. கிளியானது காமக்கடவுளுக்கு வாகன மாதலுங் காண்க. இள நிலவு காணுந் தோறும் பிரிவுற்றார துள்ளம் துளங்குதலின் 'துளங்கு மிளம்பிறை' என்றார். இறைவனுடைய திருமேனி செம்பவளமும் அவரின் திருநீற்றின் ஒளி முத்தின் ஒளி போலவும் இருப்பதால் நிறைந்த பவளமும் முத்தும் கலந்து வருங் காட்சி

இறைவனை நினைவூட்டுந் தன்மையது. கடலிலே செல்வது தோணியாகலின் 'கடற்றோணிபுரத்தீசன்' என்றிருப்பதும் உணர்க. ஆர்வமிக்க தலைவிக்கு தலைவன் திருநாமத்தை ஒருமுறை கேட்டாலும் அளவில் மகிழ்ச்சி தருவதாதலால் "திருநாம மெனக் கொருகாற் பேசாயே" என்றார். கிளி கற்பித்தபடி தலைவனது பெயர்கூறும் ஆற்றலுடையதெனினும் தலைவனை வா வென்று கூவும் ஆற்றல் குயிலுக்கு மிகுதி. குயிலானது பால்மணமிக்க பூவுடைய மாவின் தளிர்களைக்கொத்திக் கொண்டு சோலையிலே இனிமை பயக்கத்தக்க மொழி கூறுந் தன்மையது.

இளங்குயிலும் மாந்தளிரும் காமக் கடவுளுக்குரிய இளவேனிற்காலச் சிறப்புப் பொருள்கள். குயிலின் ஓசையானது தனது தலைவனுக்கு மாத்திரமல்லாமல் பிறர்க்கும் இன்பந்தரவல்லது. தலைவன் வீற்றிருக்கும் திருத்தோணிபுரத்தின் பாங்குருள்ள பொழில்களிலே மிகுதியும் பயின்றமையால் தலைவன் உவப்பிற் குரியன. ஆதல்பற்றி தலைவனைத் தன்னிடம் வரும்படி அழைப்பதற்குத் தக்க வாயிலாகிய குயிலினைத் தூதாக விடுமுறையினை வரும் பாட்டுக்களிற் காண்க.

"பாணுறு மலர்ச் சூதப் பல்லவங் களவை கோதி
ஏனோர்க்கு மினிதாக மொழியு மெழிலிளங்குயிலே
தேனாரும் பொழில் புடைசூழ் திருத்தோணி புரத்தமரர்
கோனாரை யென்னிடைக்கே வரவொருகாற் கூறாயே"

நெய்தல் நிலத்திற்குரிய அன்றில் அன்னம் முதலியன தமது பெண்டிரொடு கூடிவாழுகின்ற காட்சி பிரிந்துறையுந் தலைவிக்கு மிகுதியுந் துயர்தருவதாகலின், அவற்றை நோக்கி அகன்று போய்த் தமது தலைவனிடத்தில் தலைவி தன்னுடைய துன்பத்தை உணர்த்தும்படி வேண்டுகின்றாள்.

"பொன்னம் பூங்கழிக் கானற் புணர் துணையோ டொன்வாழு
மன்னங்கா ளன்றில்கா ளகன்றும் போய் வருவீர்கள்
..........................................
..........................................என தல்லலுரையீரே"

இங்ஙனம் கூறும் பாட்டுக்களில் உள்ளுறை உவமமும், இறைச்சிப் பொருளும் பல இடங்களில் நயந்தருவன. அவைவிரிப்பிற் பெருகும். இறைவன் வீற்றிருக்கும் திருப்பதியைத் தூரத்திலே கண்ட அளவிலே தனது தலைவனது திருப்பதியென்று அதனை விதந்து கூறும் நயம் பாராட்டத்தக்கது.

"சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்துமாலை வைகும் போதென் மனத்துள்ளார்
மைந்தா மணாளா வென்ன மகிழ்வா ரவர்போலும்
பைந்தண் மாதவி சோலைசூழ்ந்த பாசூரே"

இத்திரட்டில் இதுவரை கூறியுள்ள பகுதிகளின் வைத்து இயற்கைப் பொருள் நயத்தின் விரிவாராய்ச்சி பின் விரிவாகச் செய்யப்படும். இப்போது இப்பகுதியோடு இத்திரட்டு முடிவுறும். ஐம்புலனிற்கும் இனிமை பயக்கத்தக்க இயற்கைப் பொருள்

களைப் புனைந்துரைத்தலும் பல்வகை நிலப்பொருள்களைப் பகுத்தும் இணைத்தும் நயம்பெறக் கூறுதலும் பொருள்களின் வெளிக் காட்சியின்பாற்படும். வெளித் தோன்றும் பொருள்களை மக்களுடைய வளர்ச்சியோடும், அறிவோடும் இணைத்து அவைகளிலே தம் பண்பின் போலிகளைக் கண்டு களிக்குங் காட்சி உட்காட்சி அல்லது அகக்காட்சி என்று பொருள்படும். முன்னது பாமரர்க்கும் பின்னது பாவலர்க்கும் மிகுந்த இனிமைபயக்கும்.

இருவகையாகவும் இயற்பொருள் நயம் விளக்கிய நமதாசிரியர் இயற்கை உலகத்தினை இறைவனது திருவருட் செயற்றிறன் பலப்பல வகையாக விளங்குதற்குரிய இடமாகவே பல இடங்களிற் குறித்துள்ளார்.

எழுவகைப் பிறப்பெடுத் துழலும் உயிர்கள் யாவும் இன்புறுவதும் துன்புறுவதும் இறைவனது திருவருட் செயலே. பல்வகை உயிர்களும் இறைவனை வழிபடுதற்குரியன என்பதே பல இடத்தும் காணப்படுகின்றது.

"மந்தி யேறியினமாய் மலர்கள் பலகொண்டு
முந்திவந்து வணங்குங் கோயின்"

"பகரத்தாராவன்னம் பகன்றில் பணிந்தேத்த"

என்பதனால் அது விளங்கும்.

நமதாசிரியர் தேவாரத் திருப்பாட்டுக்களில் மிகுதியும் இயற்கை நயங்களையே எடுத்துக் கூறு வதால பயன் இன்னதென்று சிலர் கருதுதல் கூடும். உலகத்தை நோக்குமிடத்துத் திருவருள்பெற்ற பெரி யோர் ஒருவகை யாகவும் ஏனையோர் பிறிதொரு வகையாகவும் அதனைக் காண்பர்.

'மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்''
பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம்''

என்றவாறு எங்கும் பரமெனக் காணும் பெரியார் எல்லாம் இறைவனது திருவருள் விலாசமாகக் காண் பர். 'நின்னுவார் பிறரன்றி நீயே யானாய்' என்பதும் அது. தத்துவங்கள் யாவற்றையுங் கடந்து நின்ற கடவுளுடைய திருவருளினால் 'உணர்வினோர் பெற வரும் சிவபோகத்தை யொளிவின்றி யுருவின்க, ணணையுமைம்பொறி யளவினு மெளிவரவருளினை யெனப்போற்றி '' என்ற வண்ணம் ஐம்பொறி யுணர் வினும் சிவபோகந் துய்க்கவல்ல திருஞான சம்பந்தப் பெருமான் இயற்கைப்பொருள் எவற்றையும் தமக் குத் திருமுலைப் பால் அளித்துச் சிவஞானம் தந்த திருவருட் பெருஞ் சத்தியின் அளப்பருங் காட்சி யாகவே கண்டனர். தில்லையின்கண் ஊனக் கண்ணிற் குப் புலனாகும் பொன்னம்பலத்தையும் இறைவரது திருக்கூத்து வடிவத்தையும் முறையே தாம் பெற்ற

மெய்ஞ்ஞானமாகவும் அம்மெய்ஞ்ஞான நிறைவின் பயனாக எழுந்த வரம்பிலின்பமாகவும் கண்டனர் என்பது,

"அண்ணலார் தமக்களித்த மெய்ஞ்ஞானமே யானவம்பலமுந்த
முண்ணிறைந்த ஞானத்தெழு மானந்தவொரு பெருந்தனிக் [கூத்துங்
கண்ணின் முன்புறக் கண்டு கும்பிட்டெழுங்களிப் பொடுங் [கடற்காழிப்
புண்ணியக் கொழுந்தனையவர் போற்றுவார் புனிதராடிய பொற்பு"

(பெரியபுராணம்)

என்று ஆசிரியர் சேக்கிழார் பெருமான் திருவாய் மலர்ந்தருளினமையால் நன்கு விளங்கும்.

'ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்' "கழுமலை முதுபதிக் கவுணிய னறியுமனைய தன்மையை" என்றுங் கூறிய வாற்றால் ஆசிரியரது அளவில் பேரறிவு இனிது விளங்கும்.

"உமையலா துருவமில்லை உலகலா துடைய தில்லை" என்று கூறியவண்ணம் உலகமெல்லாம் இறைவன் உடைமையென்றும் உலகத்தைப் படைத்துக் காத்தழிக்கும் திருவருளே இறைவனது உருவமென்றும் கொள்ளுமிடத்து 'எவ்வுயிரும் பராபரன் சந்நிதியாகவும் இலங்குமுயிருட லனைத்தும் ஈசன் கோயிலாகவும்' அமைதல் பற்றி நமதாசிரியர் திருவாய் மலர்ந்தருளிய இயற் பொருட்கட்டுரை யாவும்

எம்பிரானுரா தி ஞானத் திருக்கோயில் சீர்விளக்கும் புகழுரையேயா மென்க.

படைப்பு அனைத்தும் திருவருள் விளைவே.

"போற்றி நின்கருணை வெள்ளப் புதுமதுப் புவனநீர் தீக்
காற்றிய மானன் வானமிரு சுடர்க்கடவுளானே"

"போற்றியிப் புவனநீர்தீக் காலொடு வானமானாய்
போற்றியெவ் வுயிர்க்குந்தோற்ற மாகிநீ தோற்றமில்லாய்
போற்றியெல் லாவுயிர்க்கு மீறு யீறின்மையானாய்
போற்றியைம் புலன்கணின்னைப் புணர்கிலாப் புணர்க்கை
யானே"

(திருவாசகம்).

திருஞான சம்பந்தர் திருவடி வாழ்க




சிறுமணவூர் முனிசாமி முதலியார் அண்டு சன்ஸ்.
சிவகாமிவிலாச அச்சுக்கூடம், சென்னை.